




தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ]   பிரமாதிச ஆவணி   (17-8-73)   [கருணை 11

## சிந்தாமணி விநாயகர்

ராகம் கரஹரப் பிரியா   தாளம் ஆதி அரைஎடுப்பு

பல்லவி

சிந்தாமணி விநாயகன் அருளால்—எந்தன்
சிந்தை தெளிவுறுகவே—(சிந்தாமணி)

அனுபல்லவி

வந்தனை செய்கின்றேன் வாரண முகத்தோனே
சந்ததமும் அருள்வாய் சிந்தையெலாம் நிறைவாய்
(சிந்தாமணி)

சரணம்

அந்தமும் ஆதியுமிலா ஆனைமுகத்தோனே
கந்தவேள் மணமுடிக்க கரியுருவாகி வந்தாய்
செந்தமிழ் பாடினேன் சிந்தாமணியப்பா
நந்தமிழ் நாயகா நலமதே யருள்வாய்   (சிந்தாமணி)

இயற்றியவர் திருமதி ஜெயம் கிருஷ்ணசாமி
ஆழ்வார் திருநகர்

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்
சென்னை - 600 087



# ஸ்ரீ சிந்தாமணி விநாயகர்

ஸ்ரீமதி R ஜானகி சுப்ரமணியம்

அத்தி மரந்தனில் தோன்றி

ஆழ்வார் திருநகரில் (பால) ஆலயம் கொண்டோய்

இளையவனும் குஹனும் ஈசனார் கைகனி பெற.

உலகம் வலம் வந்தும் பெற இயலாது

ஊடல் கொண்டுமே

எண் திசை புகழாம் வடபழநியில் வந்து

ஏகாங்கியாய் ஏக்கமுற்றோனே

ஐக்கியமது பேசி . ஒற்றுமை பெறவே இங்கு வந்துற்றனையோ

ஓங்கார உருக்கொண்ட நின் துதிக்கையில்

ஔவைதனை ஏற்றினாய் கைலாயம் தனுக்கே

அஃ என ஆய்தெழுத்தின் அடையாளம் கொண்ட

தேங்கனிக்குத்தான் நீ வயப்பட்டதென்ன?
காஞ்சிமாமுனியின் கருத்திலுதித்த
நின்திருநாமம் சிந்தாமணியல்லவோ
சீரடிபற்றிய பேர்க்கெல்லாம் அளித்திடும்
அருளுக்கும் ஓர் எல்லையுண்டோ
என் சித்தத்தில் நின்றாடும் சிந்தாமணி விநாயகனே

# எறும்பு



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்

எல்லாவுயிர்களும் வெவ்வேறு எண்ணங்களையுடையவ. ஒருவர் எண்ணுவதுபோல் மற்றொருவர் எண்ணுவதில்லை; ஆனால் துன்பம் இல்லாமல் இருக்க வேண்டும் என்று எல்லா உயிர்களும் ஒருமனதாக எண்ணுகின்றன. இந்த ஒன்றில் யாருக்கும் கருத்து வேற்றுமையில்லை.

அரசனுக்குந்தான் ஏதாவது துன்பம் இருக்கின்றது. ஆண்டிக்குந் துன்பம்; கோடீஸ்வரனுக்கும் துன்பம். துன்பம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதத்தில் வருகின்றது. துன்பம் இல்லாதவர்களே கிடையாது. பொருள் நிரம்பி இருந்தால் புதல்வர்ப்பேறு இல்லாமல் இருக்கும். மக்கட்பேறு இருந்தால் செல்வம் இராது. இரண்டும் இருந்தால் உடல் நலம் இராது. சிலருக்கு உத்தமமான பத்தினி இராது. சிலருக்கு நல்ல பிள்ளைகள் அமையாது.

சில குடும்பத்தில் தாய் மருகியை இடர்ப் படுத்துவாள். மகன் என் செய்யான்? தாய் பக்கம் சேர்ந்து பேசினல் மனைவியின் மனம் வருந்தும். மனைவியின் பக்கம் சேர்ந்து பேசினுல் தாய் மனம் வருந்தும். ஆகவே இரு பக்கமும் சார இயலாது மவந் தளரும்.

மற்றும் பல்வேறு வகையில் இருபக்கமும் திரும்ப முடியாதபடி இடர்கள் வரும். இரண்டு யானைகள் மோதுகின்றபோது அதற்கிடையில் ஒரு கொசு அகப்பட்டுக்கொண்டால் அதன் கதி என்னவாகும் ?

ஒரு சிலருக்கு அருள் தாகம் அளவுக்குமேல் எழும். அருள் தாகத்தைத் தணிக்க எங்காவது ஆசாரியனை நாடி அல்லது இமயம் முதலிய புனித இடத்தை நாடிச் செல்லவேண்டும் என்ற வேகம்

எழும்; அப்போது மனதில் ஒரு சிந்தனைப்போட்டி நிகழும்.

நாம் இமயம் அல்லது புனிதத் தலம் எங்காவது சென்று குரு மொழியைப் பெற்று உய்வு பெற வேண்டாமா?

"ஆமாம்! அப்படிப் போவதாயின் நம்பியிருக்கின்ற மனைவியையும் இளம் குழந்தைகளையும் அவல நிலையில் விடுத்துப் போன பாவம் வருமே?"

"நாமா இவர்களைக் காப்பாற்றுகின்றோம்? எல்லா உயிர்களையுங் காப்பாற்றுகின்ற கடவுள் இவர்களைக் காவாது ஒழிவரோ!

"நம்மையே நம்பியிருக்கின்ற இவர்களைக் காப்பது நமது கடமையல்லவா? கடமையை மறப்பது மடமை. ஆகவே இந்தக் கடமைகளைச் செய்து கொண்டே பக்தி செய்தால் முத்தி வராதா?"

"குடும்பத்தில் இருந்தால் அதிக நேரம் உலக விவகாரத்தில் தான் கழிகின்றது. குடும்பத்திலும் பற்று, கடவுளிடத்திலும் பற்று."

"இது இரண்டு படகுகளில் காலவைப்பது போல் ஆகின்றது. ஆகவே நாம் குடும்பத்தை விடுத்தாலன்றி உய்வு ஏற்படாது. ஆகவே இந்த விலங்கத்தை விட்டு ஒழிக்கவேண்டும்."

"அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல் வேண்டும் வேண்டிய எல்லாம் ஒருங்கு" என்பது திருவள்ளுவர் வாக்கு. ஆகவே எல்லாவற்றையும் விட்டுத் தொலைத்தாலன்றிக் கடைத்தேற முடியாது.

"இளையான்குடி மாறநாயனாரும், சிறுத்தொண்ட நாயனாரும், வசிட்டரும், அகத்தியரும், இல்லறத்தில் இருந்து விருந்தோம்பித் தானே பரகதி பெற்றார்கள்.

"இல்லறமல்லது நல்லறமன்று". 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்றெல்லாம் ஆன்றோர்களின் அமுதவாக்குகள் வலியுறுத்துகின்றன. ஆகவே இல்லறத்திலிருந்து கொண்டே வந்தவர்களை ஆதரித்து, செல்விருந்தோம்பி, வருவிருந்து நோக்கி வாழ்வாங்கு வாழ்ந்தால் இகபர நலன்கள் எளிதிற் கிடைக்குந்தானே."

இப்படி இருவிதமான எண்ணங்கள் மாறி மாறி எழும். இருவகையில் மனம் இப்படியும் அப்படியும் அலையும்.

இந்த நெருக்கடியை அருணகிரிநாதர் கூறுகின்றார்: இரு பக்கமும் எரியும் ஒரு கொம்பின் நடுவில் எறும்பு அகப்பட்டுக்கொண்டது. இப்படிச் சென்றாலும் நெருப்பு சுடுகின்றது அப்படிச் சென்றாலும் நெருப்பு சுடுகின்றது: பாவம் அந்த எறும்பு என்ன செய்யும்? இப்புறமும் அப்புறமுமாக அலை

கின்றது. அதன் உடம்பு மட்டுமா அலைகின்றது? அதன் உள்ளமும் உணர்வும் சேர்ந்து உழல்கின்றது.

இதனைக் கந்தரலங்காரத்தில் கூறுகிறார்.

கொள்ளித் தலையில் எறும்பது
போலக் குலையும் என்றன்
உள்ளத் துயரை ஒழித்தருளாய்
ஒரு கோடி முத்தம்
தெள்ளிக் கொழிக்கும் கடற்
செந்தில் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவனே மயி
லேறிய மாணிக்கமே.

"கொள்ளித் தலையில் எறும்பு" என்று மட்டுமே அருணகிரிநாதர் கூறினார். கொள்ளிக் கொம்பில் அகப்பட்டுக்கொண்ட எறும்பு கீழே குதித்து உய்வு பெறலாம்.

ஒரு மூங்கில் குழாய். அதில் இருபுறங்களிலும் தீப்பிடித்து எரியத் தொடங்கியது. அந்த மூங்கிற் குழாய்க்குள் ஒரு எறும்பு இருந்தது, அது என்ன செய்யும்? குழாய்க்குள்ளே இருப்பதனால் குதிக்கவும் முடியாது. இருபுறங்களிலும் நெருப்பு. அது உள்ளே கிடந்து என்ன வேதனையடையும்? அதனை உன்னிப் பாருங்கள்.

இதனைக் கூறுகின்றார் மாணிக்க வாசகர்

இருதலைக் கொள்ளியின் உள்
ளெறும் பொத்து நினைப்பிரிந்த
விரிதலையேனை விடுதி கண்
டாய் வியன் மூவுலகுக்
கொருதலையா மன்னும் உத்தர
கோச மங்கைக் கரசே
பொருதலை மூவிலை வேல்வலன்
ஏந்திப் பொலிபவனே.

—நீத்தல் விண்ணப்பம்.

"வியக்கத் தக்க மூன்று உலகங்களுக்கு ஒப்பற்ற தலைவனே! நிலை பெற்ற உத்தரகோசமங்கை என்ற திருத்தலத்திற்கு அரசே! போர் புரிகின்ற மூன்று இலை வடிவாகவுள்ள சூலத்தை வலத்தில் ஏந்திக்கொண்டு விளங்குபவரே! தேவரீரைப் பிரிந்து விரிந்த தலையை யுடையவனாகி இருபக்கமும் எரிகின்ற மூங்கில் குழாய்க்குள் அகப்பட்ட எறும்பைப் போல் தவிக்கும் அடியேனை இத்தொல்லைகளிலிருந்து விடுவித்து ஆண்டருள்வாய்."

எத்தனையோ வகைகளில் துன்பங்கள் நேருகின்றன. அத்தனை துன்பங்களையும் ஒரு கணப்பொழுதில் போக்க வல்லவன் சிவப்பெருமான். முப்பது ஆண்டுகளாக ஒரு தனி அறையில் இருள் சூழ்ந்திருந்தது. ஒரு விளக்கை ஏற்றியவுடன் இருள் அநுபோக உரிமை கொண்டாடுமா? அல்லது சிறிது நேரங்கழித்துப் போகின்றேன் என்று கூறுமா? அல்லது சிறிது சிறிதாகப் போகுமா? விளக்கேற்றிய அக்கணமே இருள் முழுவதும் அகலும்.

அப்படி அடியார்களின் வினைகளை அகற்ற ஆண்டவன் திரிசூலத்தை ஏந்திக்கொண்டிருக்

கிறான். இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி என்ற மூன்று சக்திகளும் மூவிலைச் சூலம். காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்று குற்றங்களையும் மூவிலைச் சூலத்தால் நீக்கி அடியார்களை ஆட்கொள்வான். ஆதலால் அப்பரம கருணாநிதியை ஆன்மாக்கள் தஞ்சம் புகுந்து உய்வு பெற வேண்டும்.

●

---



# வெற்றி பெறுங்கள்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

அதிகாலை 4 மணிக்கு எழுந்திருந்து இரவு 10 மணிக்கு படுக்கச் செல்லுங்கள்.

உங்களுடைய அன்றாட வேலையில் முறையாகவும், சுத்தமாகவும் இருங்கள்.

எளிய வாழ்வையும் உயர்ந்த எண்ணத்தையும் பழகி வாருங்கள்.

உங்கள் வாக்கையும் வாக்குறுதிகளையும் காப்பாற்றுங்கள்.

இயன்றவரை கோபத்தையும் சோம்பலையும் விலக்குங்கள்.

நோயற்ற வாழ்வு குறைவற்ற செல்வம், ஆனால் நன்னடத்தை நல்ல ஆஸ்திகளன்.

எல்லோரையும் நேசியுங்கள். யாரையும் வெறுக்காதீர்கள்.

தொடங்கிய வேலையைப் பாதியில் விட்டு விடாதீர்கள்.

ஒரு சமயத்தில் ஒன்றை மட்டும் செய்யுங்கள். அதைச் சிறந்த முறையில் திருந்தச் செய்யுங்கள்.

காலையிலும் மாலையிலுமாகிலும் கடவுள வழிபாடு செய்யுங்கள்.

ஆண்டவனிடத்தில் பரிபூரண நம்பிக்கை வைத்திருங்கள்.

கடவுள் செய்வதெல்லாம் நமது நன்மைக்கே.

சேவை செய்யுங்கள், பக்தி செய்யுங்கள், தானம் செய்யுங்கள், தியானம் செய்யுங்கள், தன்னை உணருங்கள்.

நல்லவராக இருங்கள், நல்லதை செய்யுங்கள், அன்பாக இருங்கள், இரக்கத்துடன் இருங்கள்.

"நான் யார்?" என்று விசாரணை செய்யுங்கள், ஆத்மாவை அறிந்து விடுதலை பெறுங்கள்.

கருமமே கடவுள் வழிபாடு. அதை பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிடுங்கள்.

தீயன எண்ணாதே,
கோவிந்தா கோவிந்தா
தீயன பேசாதே,
கோவிந்தா கோவிந்தா
தீயன பாராதே,
கோவிந்தா கோவிந்தா
தீயன கேளாதே,
கோவிந்தா கோவிந்தா

# பிரம்மச்சரியமே ஆரோக்கிய நெறி



மகாத்மா காந்திஜி

ஆரோக்கியத்திற்கான வழிகள் பல. அவையாவும் முக்கியமானவையே. ஆனுல் மற்றெல்லாவற்றையும் விட அவசியமானது பிரம்மசரியம். சுத்தமான காற்று, சுத்தமான தண்ணீர், நல்ல உணவு ஆகியவை நிச்சயம் ஆரோக்கியத்திற்கு உதவி செய்கின்றன. ஆனுல் சம்பாதிக்கும் ஆரோக்கியத்தை எல்லாம் செலவிட்டுக்கொண்டே இருந்தால், நாம் எப்படி ஆரோக்கியம் உள்ளவர்களாக இருக்க முடியும்?...

உண்மையான பிரம்மச்சரியத்தை அனுஷ்டித்தாலொழிய ஆண்களும் பெண்களும் வீரியமுள்ளவர்களாகவோ, வலிமை உள்ளவர்களாகவோ இருக்கமுடியாது என்பதில் சந்தேகம் இருக்க முடியாது.

(உடல்) சேர்க்கையில் ஆசை இருக்கும்வரை பிரம்மச்சரியத்தை அடைந்துவிட்டதாகச் சொல்ல முடியாது. காம இச்சையைப் பரிபூரணமாகச் சுட்டுஎரித்தவனையே ஜனனேந்திரியத்தைக் கட்டுப்படுத்தியவன் என்று சொல்லலாம் ...சுரப்பிகளிலிருந்து எப்போதும் விந்து ஊறிக்கொண்டே இருக்கிறது.

இந்த ஊற்றை மன வலிமை, சரீர பலம், ஆத்ம சக்தி ஆகியவற்றைப் பெருக்கிக்கொள்வதற்குப் பயன்படுத்தவேண்டும். அதை இந்த விதமாகப் பயன்படுத்தக் கற்றுக்கொள்கிறவன், தனது உடம்பைத் தக்க நிலையில் வைத்துக் கொள்ளுவதற்கு மிகக் குறைவான உணவே தேவைப்படுகிறது என்பதைக் காண்பான். அதேசமயத்தில் அவன் மற்ற யாரையும் போல் சரீர உழைப்பை மேற்கொள்ளுவதற்கான ஆற்றல் படைத்தவனுகவும் இருப்பான். மூளை வேலையினுல் அவன் சுலபத்தில் களைப்படையமாட்டான். வயோதிகத்தின்சின்னங்களும் அவனிடம்தோன்ரு.

ஒரு பழுத்த பழமோ, பழுத்த இலையோ, தானே இயல்பாக உதிர்வதைப்போல இப்படிப்

பட்ட பிரம்மச்சாரியும் தனது ஆயுள் முடியும் போது மன வலிமைகளில் எதுவுமே கெடாத நிலையில் மரணம் அடைவான். காலம் கழிந்துகொண்டு வருவதனால் உடம்பில் இயற்கையாக நரை, திரைகள் தோன்றினாலும் அவனுடைய அறிவில் தளர்ச்சியின் சின்னங்கள் தோன்றா. அதற்குப் பதிலாக அறிவு நாளுக்கு நாள் தெளிவடைந்துகொண்டேவரும்.

இவையெல்லாம் உண்மையாக இருக்கும் என்றால், ஆரோக்கியத்தின் உண்மையான திறவுகோல், ஜீவ தாதுவை விரயமாக்காமல் கட்டுப்படுத்துவதில்தான் இருக்கிறது.

விந்துவிரயம் செய்யாமல் இருப்பது பிரம்மச்சரியத்தின் நேரடியான பலன் என்றாலும், அது ஒன்றே பிரம்மச்சரியம் ஆகிவிட முடியாது. பிரம்மத்தைத் தேடிநிற்கும் முயற்சியே, பிரம்மச்சரியம் என்பதன் சரியான, முழுமையான அர்த்தம். நம்ஒவ்வொருவர் உள்ளத்திலும் பிரம்மம் இருக்கிறது. தியானத்தின் மூலம் நம்முள்ளேயே நாம் பிரம்மத்தைத்தேடிக் காணவேண்டும். எல்லாப் புலன்களையும் அடியோடுஅடக்கிவைக்க முடிந்தால் ஒழியப் பிரம்ம தரிசனம் கிட்டுவது சாத்தியமில்லை.

ஆகையால் எண்ணம், சொல், செயல் மூன்றிலும் எந்தக் காலத்திலும் எந்த இடத்திலும், எல்லாப் புலன்களையும் அடக்கியாளுவதே பிரம்மச் சரியம்,

உணர்வு, இந்திரியங்கள் எல்லாவற்றையும் கட்டுப்படுத்துவதே பிரம்மச்சரியம். மற்றவைகளை எல்லாம் இஷ்டப்படி விட்டுவிட்டு ஒரே ஓர் இந்திரியத்தை மட்டும் கட்டுப்படுத்த முயற்சி செய்பவன் தோல்வியுறத்தான் செய்வான். உள்ளர்த்தம் கொண்ட கதைகளைக் காதுகளால் கேட்பதும் உள்ளர்த்தம் கொண்ட காட்சிகளைக் கண்களால் பார்ப்பதும், உணர்ச்சிகளைத்தூண்டும்உணவை நாவினால் ருசிப்பதும், பரபரப்பு அளிக்கக்கூடிய பொருள்களைக் கைகளினால தொடுவதும், அதே சமயத்தில் மீதமுள்ள ஒரே ஒரு உறுப்பை மட்டும் கட்டுப்படுத்த நினைப்பதும் நெருப்பில் கையைக் கொடுத்துவிட்டு அது சுடாமல் இருக்கவேண்டும் என்று எதிர் பார்ப்பதுபோன்றதே.

ஆகவே ஒன்றைக் கட்டுப் படுத்த உறுதிகொண்டவன்.மீதம் உள்ளவற்றையும் கட்டுப்படுத்த உறுதி பூணவேண்டும். எல்லாத் திசைகளிலும் ஒரே சமயத்தில் நாம்புலனடக்கததைப் பின்பற்றினால்,அந்த முயற்சி விஞ்ஞான ரீதியானதாக இருக்கும். நாவின் ருசியே பிரதான பாவமாக இருக்கக்கூடும். பிரம்மசரியத்தைஎய்த வேண்டுமென்று விரும்புபவன், தான் விழிப்புற்று இருக்கும் நேரங்களில் தன் கைகளுக்கும், கால்களுக்கும் ஏதாவது நல்ல வேலை கொடுத்துக் கொண்டிருக்கட்டும். அவ்வப்போது உபவாசமும் இருக்கட்டும். தூய தோழர்களையும், தூய நண்பர்களையும்,

புனிதமான புத்தகங்களையும் பெற்றிருப்பது (அடுத்த) படியாகும். கடைசிப்படி பிரார்த்தனை. கடைசி என்பதனால் இது முக்கியமானதல்ல என்று அர்த்தமில்லை.

தினமும் ஒழுங்காகவும், மனப்பூர்வமாகவும் ராம நாமத்தைச் சொல்லி, ஆண்டவனின் அருளைக் கோரட்டும் மனமிருந்தால் வழியும் சுலபமாக இருக்கும். அதற்கு மனமில்லாததால்தான் மனிதர்கள் வீணில் தேடித்திரிகிறார்கள். அநேகமாகப் பிரம்மச்சரியம் அல்லது அடக்கத்தை அனுஷ்டிப்பதில்தான் உலகம் நிலைத்திருக்கிறது என்ற உண்மை, அது அவசியமானது, அனுபவ சாத்தியமானது என்பதையே காட்டுகிறது.

உண்மையில் தேகாரோக்கியத்திற்கும் ஒழுக்கத்திற்கும் உள்ள தொடர்பு ஜீவாதாரமானது. அதனால் நாம் தூய வாழ்க்கை நடத்தினால் ஒழிய ஒருபோதும் பூரண தேகாரோக்கியத்துடன் இருக்கவே முடியாது... இருபது ஆண்டு காலம் சரீர இச்சைகளைப் பூர்த்தி செய்துகொண்டு வந்தபிறகும் நான் (ஆரோக்கியமும் திடகாத்திரமும்) அடைய முடிந்திருக்கிறது என்றால் அந்த இருபது வருடங்களையும், பரிசுத்தமாகக் கழித்திருந்தால் இன்னும் எவ்வளவு நன்றாக இருந்திருக்கமுடியும்?

என்னைப் போன்ற அரைகுறைப் பிரம்மச்சாரியே இவ்வளவு பலன் பெற முடிந்திருக்கிறது என்றால், இடைவிடாத பிரம்மச்சரியத்தை அனுஷ்டித்தால் நமது உடல், உள்ளம், ஒழுக்கம் ஆகியவற்றிற்கு ஏற்படும் சக்தி எவ்வளவு அற்புதமானதாக இருக்க வேண்டும்.

O

● சென்னைக்கருகில் உள்ள திருப்போரூரில் இன்று எழில் மிக்க கோவிலில் குடிகொண்டுள்ள முருகப்பெருமான் இருநூற்றி ஐம்பது ஆண்டுகட்கு முன் ஒரு பனைமரத்தின் அடியில் தான் காட்சி அளித்து வந்தார் பனங்காட்டுக்குள் குடி கொண்டிருந்த அப்பெருமானுக்கு கோவில் கட்டிப் பேறு பெற்றவர் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள்.

● தினசரி பசும்பால் சாப்பிட்டு வந்தால் நாடிக் கொதிப்பு, நாடிச் சோர்வு, தூக்கமின்மை' தலைவலி முதலிய நரம்பு சம்பந்தமான நோய்கள் ஒழிகின்றன.

● குளிக்கும் நீரைக் கங்கை யமுனை முதலிய புண்ணிய நதிகளாகவும் இராமேசுவரம், கன்னியாகுமரி முதலிய புண்ணிய ஸ்தலங்களின் தீர்த்தங்களாகவும் நினைத்து ஈசுவரத் தியானத்தோடு குளிக்க வேண்டும்.

● நோயாளிகள் வெந்நீரில் குளித்தல் வேண்டும். அதுவும் கூடாதாயின் நல்ல சுத்தமான துணியை வெந்நீரில் நனைத்துப் பிழிந்து உடம்பை நன்றாய்த் துடைத்துக் கொண்டு திருநீறு பூசுதல் வேண்டும்.

● யானைக்கு மூன்று மதங்களைப் போல் மனிதனுக்கும் தன் மதம், குலமதம், கல்வி மதம் என்ற மூன்று மதங்கள் உண்டு.

● ஆறுமுகங்கள், பன்னிரண்டு கரங்கள், அழகிய வடிவேல் இவற்றைக் கொண்டு, வள்ளி தெய்வயானை என இரு சக்திகள் சமேதராக விளங்குவதே முருகனது உருவத் தோற்ற அமைப்பாம்.

● வியாபாரத்தில் முதல் காரியம் வாடிக்கையாளர்களை இன்முகத்துடன் வரவேற்பதே ஆகும். இதை கடையிலுள்ள ஊழியர்கள் கவனித்து நடந்து கொள்ள வேண்டும். இதுவே வெற்றியின் ரகசியம்.

● ஆப்பிள் பழம் மற்ற பழங்களைக் காட்டிலும் மிக்க சத்துடையது எனத் தவறாகநினைத்து விலையுயர்ந்தஅப்பழங்களைவாங்கி உண்கின்றனர். ஆப்பிளைக் காட்டிலும் பதின்மடங்குகள் சத்துடையது நம் பழங்காலத்து வாழைப்பழம். எந்தவித வாழைப்பழமானாலும் பரவாயில்லை.

● வேல் முருகனுக்கு உரிய சிறந்த ஆயுதம் இதற்கு ஆறு நுனிகள் உண்டு. இக்காலத்தில் சிலர் காம்பு நீளமான அம்பையே வேல் எனக் கருதுகின்றனர்.

● புண்ணிய பூமியாகிய நமது பாரத நாட்டில் திருத்தலங்களின் மிகுதியால் சிறப்புற்று விளங்குவது தென் திசை. தீர்த்தங்களின் மிகுதியால் சிறப்புற்று விளங்குவது வடதிசை.

● முருகனின் பெருமையைச் சரித்திரங்கள் வாயிலாக விரித்துரைத்த பெருமை பாம்பன் சுவாமிகளுக்குத்தான் உரியது. பல உரைநடை நூல்கள் எழுதியுள்ளதோடு முருகன் மீது 6666 பாடல்களும் இவர் இயற்றி உள்ளார்.

● வயிறு நிரம்ப ஒரு வேளைச் சோற்றுக்கே வழியில்லாதவர் கோடிக் கணக்கிலுள்ள நம் நாட்டில் பட்சணங்களும் பணியாரங்களும் தின்னுதல் கொள்ளையிடுவதற்குச் சமம் என்று காந்திஜி சொன்னார்.

● திடீரென்று மயக்கம் வந்தால் மிளகை அரைத்துப் பசும் பாலில் சேர்த்துக் கலக்கிக் கொடுக்கலாம். உலர்ந்த திராட்சையை கியாழமிட்டும் பருகலாம் மயக்கம் நீங்கும்.

● பெரும் பாலும் காய்கறிகள் கீரைகள், எலுமிச்சம்பழம், நெல்லிக்காய் இவற்றில் வைட்டமின் 'சி' உண்டாகிறது. இந்த வைட்டமின் உஷ்ணத்தினாலும், வெயிலினாலும் பாதிக்கப்படும்.

● கடவுள் அப்போதைக்கப் போது அனுப்பும் அறிகுறிகளையும் எச்சரிக்கைகளையும் புரிந்து கொள்ள முடியாதவாறு மனித வர்க்கம் அவ்வளவு மந்தமாக இருக்கிறது என்று மகாத்மா காந்திஜி வேதனையோடு ஓரிடத்தில் குறிப்பிட்டார்.

● காசியில் எழுந்தருளியுள்ள பெருமான் திருநாமம் விசுவநாதர், விசுவேசர், அகிலேசர் என்பது. இவர் பூலோகத்துக்கு மட்டும் அல்லாமல் அகில பிரபஞ்சத்துக்கும் நாதர் என்பது இதன் பொருளாகும்.

● மனம் ஆரோக்யமாக இல்லாவிடில் உடல் ஒரு நாளும் ஆரோக்யமாக இருக்காது. ஏனென்றால் உடல் இயக்கம் அனைத்தையும் உள்ளம் அரவணைக்கிறது.

● காபி, டீ, இவைகளில் எந்த உணவுச் சத்தும் கிடையாது. இது உடல் நலத்திற்கும் கெடுதல். இதற்குப் பதிலாக பால், மோர், உட்கொண்டால் உடலுக்கு வேண்டிய சத்து கிடைக்கும்.

● அசுத்தங்களை சாணம் அகற்றுவது யாவரும் கண்டறிந்த உண்மை. அது போலவே நமது உடலிலுள்ள அசுத்தங்களை அகற்றவும் சாணத்திலிருந்து தயாரிக்கப்படும் விபூதி மிகவும் அவசியமானதாகும். சிரசிலுள்ள நீர்த் தோஷம் தலைவலி முதலியவற்றை அகற்றவும் இது பயன்படுகிறது.

● ஒரு வியாபாரம் வேகமாக முன்னேறும்போது அதன் உரிமையாளரோ, அல்லது நிர்வாகிகளோ அதன் வளர்ச்சியில் போதிய கவனம் செலுத்த வேண்டும். அப்படிச் செய்து நிர்வகிக்காவிட்டால் அந்தத் தொழில் வீழ்ச்சி அடைந்துவிடும்.

● எதிலும் ஆர்வம் காணும் மனப் போக்கை நாம் பெற முயற்சிக்க வேண்டும். இப்படி நாம் பழக்கப்படுத்திக் கொண்டு விட்டால் பொழுது போக்குக்குப் பிறர் தயவை நாடவேண்டிய தேவை ஏற்படாது.

● புத்தர் காசிமாநகர் எல்லையிலுள்ள சாரனாத்தில் தான் தம்முடைய கொள்கைகளை முதலில் உலகுக்கு உணர்த்தினார்.

● விநாயகரை ஒரு முறையும், சிவ மூர்த்தியை மூன்று முறையும் அம்பிகையை நான்கு முறையும், வலம் வருதல் வேண்டும்.

● சிதம்பரம், திருநெல்வேலி, காஞ்சிபுரம், திருக்குற்றாலம், திருவருணை முதலிய திருத்தலங்களில் உள்ள சிவாலயங்களில் திருமாலும் காட்சி தருகிறார்.

● ஒருவரிடம் நேரில் பேசும் போது நீங்கள், உங்கள் என்று பன்மையாகப் பேசிவிட்டு அவர்கள் இல்லாதபோது, இவன், அவன் என்று ஒருமையில் பேசுவது மனிதனுடைய உயர்வைக் கெடுத்துவிடும்.

● நெல்லிச் சாறு, தேன், திப்பிலி பொடி மூன்றையும்குழைத்து உள்வாய், நாக்கு முதலியவற்றின் மீது பூசினால் அங்குள்ள புண்கள் ஆறும். நெல்லிப் பொடியைத் தினமும் சிறிது உண்டு வந்தால் குரல் இனிமையடையும்.

● உடம்பின் பயன் இறைவனை அறிவதாகும். கல்வியின் பயன் கடவுளை தொழுவதாகும்.

● பக்தர்கள் இறைவனை வழிபட அவர்களைக் கோவிலுக்கு அழைத்துச் சென்று கோவிலை அறிமுகப்படுத்தும் தரகாாக காசியிலும், வட இந்தியாவில் உள்ள ஏனைய தலங்களிலும் பண்டாக்கள் பெருங் கூட்டமாக உள்ளனர்.

● சின்னஞ்சிறு விஷயத்திலும் சாதாரண விஷயத்திலும் சிக்கனம் செய்வதைக் காட்டிலும் லாபம் தரக்கூடிய வேறு விஷயங்களில் கவனம் செலுத்துவது நல்லது.

● கடல் கடந்த நாடுகளில் நகரத்தார்கள், குடும்பம் இல்லாத துறவு வாழ்வு வாழ்வதால் முருகனை தண்டாயுதபாணியாக வழிபடுகிறார்கள்.

● உணவில் எண்ணெய் உபயோகத்தைக் குறைக்கவேண்டும். அளவுக்கு மீறிய எண்ணெய் உபயோகத்தினால் கொழுப்புச் சத்து உடலில் பரவி, கல்லீரல், மண்ணீரல் முதலிய உறுப்புக்களைத் தாக்கும். சுயநிலையில் இயங்கும் சக்தி அவைகளுக்குக் குன்றிவிடும்.

● நாம் ஈட்டிய பொருளை இழந்து விட்டால் அது ஒரு இழப்பாகாது. உடல் நலம் இழந்து விட்டால் அது ஒரு சிறிய இழப்பாகும். ஆனால் பண்பை இழந்தால் எல்லாம் இழந்தவராவோம். ●

# மனம்

ஸ்ரீ சாரதாதேவி

ஒவ்வொன்றும் மனத்தைப் பொறுத்தே உள்ளது. மனத்தூய்மையின்றி ஒரு காரியத்தையும் சாதிக்க இயலாது. முக்தியை நாடுவோனுக்குக்குரு, இறைவன். பக்தர்கள் ஆகியோரது அருள் கிட்டியிருந்தாலும், தனது மனத்தின் அருளைப்பெறுது போய் விடின் அவன் துன்பத்துக்காளாவான். முமுக்ஷுவின் மனம் அவனுக்கே அருள் புரிவதாக இருக்கவேண்டும்.

கடவுளை ஒருவன் தரிசிப்பதால் வேறென்ன அடைகிறுன்? அவனுக்கென இரு கொம்புகள் முளைக்கின்றனவா? அல்ல, அவன் மனம் பரிசுத்தமடைகிறது; மனம் பரிசுத்தமடைவதால் அவனுக்கு மெய்யறிவும், ஞானவிழிப்பும் ஏற்படுகின்றன.

பரிசுத்தமான மனமுடைய ஒருவன் எல்லாவற்றையும் பரிசுத்தமானதாகவே காண்கிறுன்.

தூய்மையான மனமுடைய ஒருவன் இறைவன் நாமத்தை ஜெபிக்கும்போது, அந்நாமம் அவனுள்ளிருந்து தாஞகவே குமிழியிட்டுக் கிளம்புவதை அவன் உணர்கிறுன். நாமத்தை ஓத அவன் பாடுபடவேண்டும். ஒவ்வொருவரும் சோம்பேறித்தனத்தை விடுத்து, குறிப்பிட்ட காலத்தில் ஜெபமும், தியானமும் செய்யப் பழகுதல் வேண்டும்.

மனமே சர்வமும். "இது சுத்தமானது இது அசுத்தமானது" என்பதை மனத்திஞலேயே ஒருவன் உணர்கிறுன். பிறரிடத்துக் குற்றம் காணும் ஒருவன், முதன் முதல், தன் மனத்தையே மாசுபடுத்திக்கொள்பவன் ஆகிறுன்.

இயற்கையாகவேமனம் அமைதியற்றது. ஆகவே, மனத்தை ஒரு நிலைப்படுத்துவதற்குமுன்: ஒருவன் மூச்சைக் கட்டுப்படுத்தித் தியானம் செய்யலாம். அது மனத்தை ஒரு நிலைப்படுத்த உதவுகின்றது. ஆனுல், அதிக அளவில் அதைச் செய்தல் கூடாது. ஏனெனில் அதஞல் மூளை சூட்டையும். நீங்கள் ஈசனது தரிசனத்தைப் பற்றியோ, தியானத்தைப் பற்றியோ பேசலாம். ஆனுல் மனமே முக்கியம் என்பதை நினைத்துக்கொள். மனம் ஒரு நிலைப்படும்போது ஒருவன் எல்லாச் சித்திகளையும் பெறுகிறுன்.

தொடர்ந்தாற்போல் தியானம் செய்தால் மனம் உறுதிபெற்றுவிடும்; அப்போது அதை விட்டுவிடவேண்டுமென்றே உங்களுக்குத்தோன்ருது. தியானம்செய்யக் கூடிய நிலையில் உங்கள் மனம் இல்லாவிட்டால், அதைஅவ்வாறு செய்ய நிர்ப்பந்திக்க வேண்டா.

இம்மாதிரி சமயங்கள், இடத்தை விட்டு எழுந்து வணக்கம் செய்து விட்டுச் சென்றுவிட வேண்டும். உண்மையான தியானம் தானுகவே உண்டாகும் தன்மையுடைய தாகும்.

குழந்தாய்! இம்மனம் மதங் கொண்ட யானையைப்போன்றது. வாயுவின் வேகத்தோடு மனமும் ஓடும். ஆகவே, ஒருவன் எந்நேரமும் விவேகத்தால் ஆராய்ந்து வர வேண்டும், இறைவனைக் காண அவன் கடுமையாகப் பாடுபட வேண்டும். அக்காலத்தில் எத்தகைய மனநிலையை நான் பெற்றிருந்தேன்! தக்ஷிணேஸ்வரத்தில் இரவுக்காலத்தில் யாரோ ஒருவர் குழலூதுவார். அக் குழலோசையைக் கேட்குங்கால், என் மனம் இறைவனைக் காணப் பேரவாக் கொள்ளும். அந்த ஒலி நேராக இறைவனிடமிருந்தே வருவதாக நான் கருதி, சமாதி நிலையில் ஆழ்ந்துவிடுவேன்.

அநேகநோன்புகள் நோற்றலின் பயனுகவே மனத்தைத் தூய தாக்க முடியும். இறைவன் தூய்மை உருவினன். ஆதலின் நோன்பின்றி அவனைக்காண முடியாது.

ஒருவன் நாள்தோறும் பதினையாயிரம் முதல், இருபதினுயிரம் வரை இறைவன் பெயரை ஜெபிப்பானுகில், மனத்தை நிலைநிலைத்த முடியும். இது முற்றிலும் உண்மை. நானே அதை உணர்ந்திருக்கிறேன். இம்முறையை அவர்கள் கடைப்பிடிக்கட்டும். முயற்சியில் தோல்வியடைந்தால், பிறகு முறையிடலாம்

# அருள்வாக்கு



ஸ்ரீ சாந்தானந்த
ஸ்வாமிகள்

அறிவதற்கு நாளெல்லாம் நல்ல நாளே யாகுமென்பதை மறவாதே.

பக்தன் கடவுளைத் தவிர ஒன்றையும் விரும்பமாட்டான்.

மீன் தண்ணீரையே விரும்புவது பக்தன் போல் கடவுளையே விரும்புவான்.

நீ எதை வழிபட்டாலும் அதற்குள் சக்திதான் இருந்து வருகிறது.

உனக்குள் ஆத்ம சக்தி இருக்கும்போது நான் சக்தியற்றவன் என்று பொய் சொல்லுகிறாயே.

தினம் ஒரு கல்லை சிரமமின்றி கொண்டு சேர்த்தால் பல வருஷங்களில் கல்கள் மலைபோல் ஆகிவிடும். மனமே! தினம் சில நிமிஷம் நீ செய்யும் ஜெபத்யானம் பல வருஷங்களில் உன்னை வியப்பில் ஆழ்த்தி விடும்படியான உண்மையைக் காண்பாய். மறவாதே.

ஏ மனமே! நீ இவ்வுலகிற்கு தனியாகவே வந்தாய். தனியாகவே சாகப் போகிறாய். நீ நல்லறிவோடு இருக்கும்போது தனியாக இரு என்றால் தயங்குகிறாய். பயப்படுகிறாய் துணைக்கு ஆண்களைச் சேர்க்கிறாய். அறிவு கெட்டவனே! உனக்குள் இருக்கும் தனிப்பெருங் கடவுளை (உனதாத்மாவை) தனித்திருந்து பார்த்து பேரானந்தத்தை அடையாமல் அலைந்து திரிகின்றாயே.

தன்னை உனக்குள்ளே தேடு, உன்னை நீ அறிந்து கொள்ள முடியும்.

கடவுளை சத்தியமாக நம்பினவன் அகக் கண்கள் தானே திறந்து விடும்.

பாவிகளின் மனம் காலமெல்லாம் ஆசையில் ஊறிப் போனதினால் கடவுள் நாமத்தைச்சொல்ல அஞ்சுகிறது.

தன்னைத்தான் அறிந்தவனே மறுபிறவியை ஜயித்தவனுவான்

பக்தியற்றவனையும் பக்தனுக்குபவனே பக்தனுவான்.

கடவுளை நீ வேண்ட வேண்டியது, இறைவா என்னை எனக்குக் காட்டிவிடு என்று வரம் கேட்பாயாகுக.

வீரபுருஷன் ஒருவனுல்தான் உலகிற்கு நன்மை செய்யமுடியும்

வீரமற்றவன் பாவம் செய்யத் துணிகிருன்

மெய்ப்பொருள் உனக்குள் ஆத்மாவாகவே இருக்கிறது மறவாதே.

முழுமனத்துடன் கூடிய அடைக்கல முள்ளவனே முக்தனுக முடியும்.

ஆத்மா அனைத்தையும் ஒன்றுகக் காண்பதே இன்பம். பலவாகக் காண்பதே துன்பமாகும்.

ஞானமில்லாதவன் பேச்சில் நம்பிக்கை வைக்காதே.

உனக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் கெட்ட எண்ணங்களை விரட்டுவதே உனது முதல் வழிபாடாக இருக்கட்டும்

அகந்தையற்றவன் அனைத்தையும் கடவுள் மயமாகப் பார்ப்பான்

உன் உடலுக்குள் உயிர் இருப்பதை நீ நம்புவதைப்போல உன் உயிருக்குள் கடவுள் இருக்கிறதையும் நீ நம்பிவிடுவையாகுக.

திருடனுக்கு நல்லவர்கள் சங்கம் துன்பத்தைத் தரும்

பொய்ப் பொருள் மன இருளை உண்டாக்கும்

உன்னைக் கடவுளாக்குபவன் குரு. குருபக்தி இருந்தால் குறைகள் அனைத்தும் தீர்ந்து விடும். கடவுளாகிய குருவை மறவாதே குருவாக்கின்படி நட. நீ கடவுளாகி விடுவாய்

சூர்ய நாராயணனைப் போல் நீயும் நிஷ்காம்யமாக சுறுசுறுப்புடன் ஊக்கமாக உண்மையாக சேவை செய்துவா. புனிதனுவாய்

பற்றற்றுப் பணிபுரிபவனே நடுநிலையில் உறுதியாக இருக்க முடியும்

முழுமனத்துடன் குரு கைங்கர்யம் செய்பவனுக்கு அஹங்காரம் ஒழிந்து போகும். ஸத்குரு சேவை சித்த சுத்தியை உண்டாகி பேரின்ப நிலையில் இறுத்தி வைக்கும் மறவாதே

நீ, நல்ல, உண்மையான உறுதியான, ஊக்கமான தொண்டனுகி

விடுவையானால் கடவுள் உனக்குள் காட்சி கொடுப்பார்

பக்தன் கடவுளையும் வேலை வாங்கும் சக்தி படைத்தவனாகிறான்

நீ மனிதனாகப் பிறந்தது இம்மையில் சிறந்த பக்தவனாவதற்காகத்தான் என்பதை மறவாதே

பலகோடி கடவுளையும் சிருஷ்டித்தது சக்திதான் என்பதை நம்பிவிடு

கடவுளைக் காணவேண்டு மென்கிற ஆசை உனக்கு இல்லையென்றால் கடவுள் உனக்கு எப்படி தரிசனம் தருவார். கடவுளை விலை கொடுத்து வாங்கிவிட முடியாதென்பதை மறந்து விடாதே. கடவுளைக் காண முழு மனதுடன் நீ ஆசைப்படு. கடவுளைக் காண்பாய்

தன்னகத்திலுள்ள அருட்பெரும் ஜோதியை நீ பிறருடன் பார்க்க விரும்புகிறாயே முடியுமா சொல், மூடனே தனித்திருந்து தனக்குள் தானே பார்த்து அனுபவிக்க வேண்டு மென்பதை மறந்து விடாதே

தன்னை அறிந்தவனே உயர்ந்தவன் அவனையே மேன் மக்களுள் மகாபுருஷர் என்று ஞானிகள் கூறுவார்கள்

கடவுளின் திருநாமத்தை இடைவிடாமல் ஜபிப்பவனுக்கு அவனருள் இலவசமாகக் கிட்டிவிடும். மறவாதே

நீ பரிசுத்தனாக வேண்டு மென்றால் உன்னை உனக்குள் கண்டு கொண்டுவிடு

நீ பேசும் வேதாந்தம் உனக்குப் பலன் கொடுக்காமல் இருப்பதற்கு என்ன காரணமென்று உன்னை நீயே கேட்டுக்கொள்

வீரபுருஷன் நேர்மையிலிருந்து நழுவ மாட்டான்

தன்னைக் கடவுளுக்கு கொடுப்பதே தியாகமாகும்

பூரண சரணாகதி ஒன்றே நீ செய்யவேண்டிய கைங்கர்யமாகும்

உன் உடம்பு அழிந்து போகும் உனக்குள் இருக்கும் ஆத்மா அழிவற்றதாகுமென்பதை மறவாதே

ஆசையுள்ளவன் துக்க கீதத்தையே பாடிக்கொண்டிருப்பான்

உன்னகத்துள் உள்ள கர்வம் எங்கிருந்து வெளிவருகிறதென்பதை முதலில் நீ அறிந்து அந்த அசுரனை உடனடியாக வெளியே விரட்டுவாயாக

அகந்தையற்றவன் பிறரைக் குறைகூறவே மாட்டான்

இன்பம் உனக்கு வெளியில் இல்லை. மறவாதே!



# பொன்மொழிகள்

## ஸ்ரீ புத்தர்

நான் உனக்குச் சொல்வதைக் கேள். நீ வாழும் நிலையிலே அமர்ந்து, உன் முயற்சிகளிலே உன்னைச் சுறுசுறுப்பாக ஈடுபடுத்திக்கொள். வாழும் நிலையும், செல்வமும், அதிகாரமும் ஒருவனை அடிமையாக்கமாட்டா; வாழும் நிலையிலும், செல்வத்திலும், அதிகாரத்திலும் கொள்ளும் பற்றே அடிமையாக்கும்.

உள்ளிருந்து உணர்ச்சி எழுந்து அவ்வாறு செய்யும்படித் தூண்டினலன்றி, ஒருவன் வீடு வாசலற்ற நிலையினை மருவவேண்டு மென்றோ உலகத்தைக் கைவிட்டுவிடவேண்டுமென்றோ ததாகதரின் அறம் கட்டாயப்படுத்துவதில்லை; ஆனால் ஒவ்வொருவரும் தானென்னும் மித்தையினின்றும் விடுவித்துக் கொள்ளவேண்டும்என்றும் தனது நெஞ்சைத் தூய்மைப் படுத்த வேண்டும் என்றும், சிற்றின்ப வேட்கையைத் துறக்கவேண்டும் என்றும் செந்நெறி வாழ்வைப் பற்ற வேண்டும் என்றும் ததாகதரது அறம் பணிக்கின்றது.

நன்றும் தீதும் ஆய நம் செயல்கள் நிழல்களைப்போன்று நம்மை இடை விடாது தொடர்ந்து வருகின்றன.

ஞானவான்கள் அனைவரும் உடலின்பங்களை உதைந்து தள்ளுவர். இவர்கள் காமத்தை அருவருத்து, தம் ஞானவாழ்வை வளர்க்க நாடுகின்றனர்.

ஒரு மரத்தே கோரமான தீப் பற்றி எரியுங்கால் பறவைகள் ஆங்கே குழுமுவது எங்ஙனம்! காமமும் சினமும் வாழுமிடத்தே மெய்ப் பொருள் உரைய மாட்டாது.

காமமெனும் வெள்ளம் யாவரிக்கும் பொதுவான ஓர் அபாயமாம்; உலகத்தை அது அரித்துச் செல்கிறது. அதன் சுழிகளிலே சிக்கிக் கொள்பவன் தப்புவதில்லை. ஆனால் ஞானம் உய்த்தற்கெளிய தோணியாம், சிந்தனையே சுக்கானும். உன்னுயிரை மாரன் எனும் பகைவனின் தாக்குதலுக்கு ஆளாகாதவாறு காத்துக்கொள்ளும் வண்ணம் சமயக்குரல் உன்னை அழைக்கின்றது.

நம் செயல்களின் விளைவுகட்குத் தப்பிப் பிழைத்தல் இயலாததாதலின், நற்செயல்களைப் பழகி வருவோமாக.

அற ஒழுக்கத்தாலும், யுக்திப் பயிற்சியாலும் உண்மையான மேன்மையை வெளிக்காட்டுக;

உலகப் பொருள்களின் இடம்பத்தைப்பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்து, வாழ்வின் நிலைமையை அறிக.

பிறர் குற்றம் எளிதே புலப்படும்; ஆனால் தன் குற்றமோ புலனாதற்கு அரிதாகும். அயலார் குற்றங்களை உமிபோன்று புடைத்தெடுப்பான்; ஆனால் தன் சொந்தக் குற்றத்தையோ மறைத்துக்கொள்வான்; வஞ்சகன் தன்னோடு சூதாடுபவனிடமிருந்து பொய்யான காயை மறைப்பதுபோல.

இரு திறத்தார் கூற்றுகட்கும் பொறுமையோடு கூர்ந்து செவி சாய்ப்பாயாக. இரண்டையும் நிறுத்துக் காண்பவனே ஒரு முனியெனப்படுவான். இருதிறத்தாரும் தம் தம் கட்சியை எடுத்துரைப்பின், சங்கம் ஒரு முடிவுக்கு வந்து சமரசத்தை நிறுவி, அதனைக்கூறட்டும்.

சினத்தோடு செப்பிடும் ஒரு மொழி மிகக் கூரிய வாளாகும்: உலோபம் (பற்றுள்ளம்) மிகக் கொடிய நஞ்சாம்; காமம் உக்கிரஞ் செறிந்த கனலாம்; அறியாமை இருள் சூர்ந்த இரவாம்.

அறியாமை உலகின் அழிவை விளைவிக்கும். பொறுமையும் சுயநலமும் நட்பை முடித்துவிடுகின்றன. பகையே மிகத் தீவிரமான சுரமாம். புத்தரே மிகச் சிறந்த மருத்துவர்.

நீதிமானை இகழ்ந்துரைக்கும் ஒரு தீயோன் மேலே நிமிர்ந்து பார்த்து வானத்தில் துப்புபவனைப் போன்றவன்; எச்சில் வானத்தை மாசுபடுத்தாது, மீண்டும் அவனது ெ ந்த உடலையே அழுக்காக்கும்.

எவனும் பிறனை ஏமாற்ற வேண்டா, எவனும் பிறனை இகழ வேண்டா, எவனும் சினத்தாற் பிறனுக்குத் தீங்கு செய்ய விரும்ப வேண்டா.

தனது காமங்கள் அழியப் பெற்றவன், அகந்தையினின்றும் விடுபட்டவன், பேரவாவின் வகைகள் அனைத்தையும் வென்றவன் அடக்கமுடையோனாய், முழு இன்பம் பெற்றவனாய் இருப்பான். அத்தகையோன் உலகிலே நேரான நெறியிற் செல்லுவான்.

நம்பிக்கையும் நல்லொழுக்கமும் நிறைந்து, புகழும் பொருளும் படைத்திருப்பவன், செல்லுமிடத்தெல்லாம் எங்கணும் மதிப்பைப் பெறுவான்.

வாழ்க்கையில் துன்பங்களால் அடிபட்ட பிறகே, பலர் இறைவன் நாமத்தை ஓதுகின்றனர். ஆனால் எவன் தன் இளமை முதற்கொண்டே மனத்தை இறைவனுடைய திருவடிகளில் அன்றலர்ந்த மலரைப் போல அர்ப்பணம் செய்கிறானோ, அவனே உண்மையில் பாக்கியசாலி.

—ஸ்ரீ சாரதா தேவி

# “ உபவாசம் ”

( திரு. அ. முத்தையன், சற்சங்கம் கண்டாச்சிபுரம்)

எண்பத்து நான்கு இலட்சம் உயிர் வருக்கங்களுள் மானுடமே சிறப்புடைதாம். தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி அத் தெய்வத் திருவருளை நாடி அடைதல் மனிதப் பிறவியினலேயே கூடும். திருவருளை நாடி அடைதற்குரிய நோன்புகளுள் உண்ணு விரத (உபவாச)மும் ஒன்ருகும். உப-சமீபத்தில், வாசம்-வசித்தல், கடவுளுக்கு அருகில் இருத்தல்.

நகங்கிருதி, தானம், விரதம், சிநேகம், நயபோசனம், கமை, உக்ஸாகம் என்னும் எழுவகைப் புண்ணியங்களுள் விரதமும் ஒன்ருகும்.

குறிப்பிட்ட நேரம் அல்லது நாட்களில் உணவொழித்திருத்தல் உண்ணுவிரதம் எனப்படும். மக்களுள் சிலர் இயல்பாகவே பசியின்மையாலோ, வறுமையினலோ, நோய் வருத்துவதாலோ, பிறர் மீதுள்ள சீற்றத்திஞலோ, எண்ணியவை கூடாமையாலோ, வேறு பல காரணங்களாலோ சிலவேளைகளில் உணவு ஒழித்திருப்பதைக் காண்கிருேம்.

“பருகப் பசியில்லாத போது பவாசம்
பசித்தால் ஒரு பானை பருக்கையும் நாசம்”
(வேதநாயகர் பிள்ளை)

என்பன போல் இவ்வாறு உணவு அற்றிருத்தல் விரதமாகாது.

குறிப்பிட்ட வேளை அல்லது நாளில் உணவு, உறக்கம் ஒழித்து தெய்வ வழி பாட்டில் சிந்தை வைத்திருத்தலே உபவாசம் எனப்படுவது. இவ்வுபவாசம் புலனடக்கம் பழகுவோர்க்கு மிக அவசியம்.

உபவாசம் இருப்போர் குறித்த காலம் வரையில் உறுதியாகப் பட்டினி கிடப்பதால் பசியினல் வரும் துன்ப நிலையை நன்கு உணர்வர். சிந்தையைப் புற விடயங்களிற் செலுத்தாமல் ஏகாக்ரம் அடைவர். பாசமானது விலகிப் பதிநினைப்புடையராவர். பட்டினியிருந்து பசியின் கொடுமையை அறிந்தவர், பசியால் வருந்தும் பிறவுயிர்களைக் கண்டு வருந்தி உணவளித்து

அத்துன்பத்தை நீக்க முயல்வர். அவர்பால் ஜீவகாருண்யம் சிறந்தோங்கும். ஜீவகாருண்யத்தால் அன்றிக் கடவுளருளைப் பெறுதல் இயலாது. இதனால் அருளைப் பெறுவான் வேண்டிச் செய்யும் நோன்புகளில் உபவாசம் இருத்தலும் ஒன்று என்பது வெளிப்படை.

காந்திஜிக்கு உபவாசம் இருந்ததால் உண்டான தெய்வீக அருட் சந்தி பல நற்காரியங்களைச் சாதித்துத் தந்தது.

"வெண் திருநீறு புனையும் மாதவர்க்கு
விருந்து செய்(து) உறு பெருமிடியும்
கொண்ட நல் விரதத்(து) இளைக்கும் யாக்கை யுமிக்
கொடியனேற்(கு) அருளும் நாள் உளதோ?"

எனத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் விரதத்தால் இளைத்த யாக்கையை வேண்டினர்.

நாள்தோறும் அறுசுவை உணவு உண்டு சுகிக்கும் ஒருவனுக்குப் பசியின் துன்ப நிலைமை உணர இயலாது. அத்தகையவன் சோம்பல் மிகுந்தவனாய் உலக இன்பமாகிய பாசத்தில் கட்டுண்டு உழல்வன். பிற உயிர்களிடத்து இரக்கம் வையான். கடவுள் அருளைப் பெறுதலும் கூடாரவாம்.

"சோற்றிலே விருப்பம் சூழ்ந்திடில் ஒருவன்
துன்னு நல் தவமெலாம் சுருங்கி
ஆற்றிலே கரைத்த புளியெனப் போம்."

என்பார் அருட் பிரகாச வள்ளலார்.

உபவாசம் இருத்தலால் உடல் நலமும் பெறலாம். உணவை இடையறாது வயிற்றுள் செலுத்திக் கொண்டே இருந்தால் ஜீரணக் கருவிகள் ஓயாது வேலை செய்ய நேர்கிறது. அதனால் ஜீரணம் தடைப்பட்டு வயிற்றுவலி வயிற்றுப்போக்கு முதலியன நேரக்கூடும்.

பட்சத்திற்கு ஒரு நாளாயினும் ஜீரணக் கருவிகளுக்கு ஓய்வு தருவது நல்லது. நம் முன்னோர்களும் பட்சத்திற்கு ஒரு நாளாகிற ஏகாதசி, சஷ்டி முதலிய திதிகளிலும் வாரத்திற்கு ஒரு நாளாகிற சோமவாரம், சனிவாரம் ஆகிய நாட்களிலும் மாதந்தோறும் வரும் கிருத்திகை முதலிய புண்ணிய நாட்களிலும் உபவாசம் இருக்கும் நியதியை ஏற்படுத்தினர் போலும்.

உபவாசம் இருத்தலால் ஜீவகாருண்யம் உடையவராய்க் கடவுள் அருளைப் பெறக்கூடும் என்றும், உடல் நலமுற இருக்கலாம் என்றும் அறியக் கிடக்கின்றது. எல்லோரும் ஒருவேளை அல்லது ஒருநாள் நியதியாக உணவொழித்திருந்தால் உணவுப் பஞ்சத்தைச் சமாளிக்க உபாயமும் ஆகலாம்.

# நற்பணிகள்

ஹிந்துமத ஜீவாத்ம கைங்கர்ய சங்கம், கும்பகோணம்

1. ஆஸ்பத்திரியிலிருக்கும் நோயாளிகளை வாரம் ஒரு முறை சந்தித்து ஸ்ரீ ஆசாரியர்களின் பிரஸாதத்தை (விபூதி குங்குமம்) அளித்தும், தெய்வ பக்தியை உண்டுபண்ணும் துதிப்பாடல் பிரசுரங்களைக் கொடுத்தும் அவர்கள் விரைவில் ஆரோக்கியம் அடைய உதவியாகத் தெய்வ சிந்தனையை உண்டுபண்ணி உத்ஸாகப் படுத்துவது.

2. மரவணுவஸ்தையில் உள்ளவர்களுக்குத் துளசி, புனித கங்கை நீர் முதலியன அளித்து அவர்கள் பக்கத்திலிருந்து ஸ்ரீராம ஜபம் செய்து அவர்களுக்குச் சாந்தி ஏற்பட உதவுவது.

3. ஆஸ்பத்திரிகளிலும் தெருக்களிலும் சிறைச்சாலைகளிலும் மரணமடைந்த அநாதைகளின் ஈமச் சடங்குகளை அவரவர்களின் சமூகப் பழக்க வழக்கங்களைத் தழுவி முறைப்படி சங்கத்தின் மூலம் செய்விப்பது.

4. வாரத்தில் ஒரு தினம் கிராமம்தோறும் சென்று ஹிந்து சமயப் பிரசாரம் செய்வது.

5. சிறைச்சாலையிலுள்ளோருக்கு நல்லொழுக்கமும் பண்பும் ஏற்பட உதவியாக அடிக்கடி சொற்பொழிவுகள் ஆற்றுவது.

செய்துள்ள பணிகள்

1. 4586 வியாதியஸ்தர்களுக்குக் குடந்தை ஆஸ்பத்திரிகளில் ஸ்ரீ ஆசார்யர்கள் பிரஸாதம் வழங்கியதுடன் 3597 சமயத் துண்டுப்பிரசுரங்களும் வினியோகிக்கப்பட்டன.

2. தமிழ் வருஷப்பிறப்பன்றும் தீபாவளியன்றும் சங்கர ஜயந்தியன்றும் சாக்லேட், நோயாளிகளுக்கு வழங்கப் பட்டது.

3. இந்த வருஷத்தில் ஆஸ்பத்திரிகளிலிருந்தும் தெருக்களிலிருந்தும் வந்த 78 அநாதை சடலங்களுக்கு முறைப்படி ஸம்ஸ்காரம் செய்விக்கப்பட்டது.

4. நிர்வாகக் குழுக் கூட்டம் 11-உம், பொதுக்கூட்டம் ஒன்று நடந்து அலுவல்கள் கவனிக்கப் பட்டன.

வேண்டுகோள்

இச் சங்கப் பணி வரவர விருத்தி அடைவதனுலும், கால நிலைக்கு ஏற்பவும், வருங்காலச் செலவு மிகவும் கூடுதலாகும் என்பதில் ஐயமில்லை. இப் புனித கைங்கர்யம் பொதுமக்களின் பேருதவியாலும், முனிஸிபாலிடியின் நன்கொடையாலும் இது வரை நடந்து வருகிறது.

இனியும் தொடர்ந்து நடகக, ஸ்ரீ ஆசார்யர்களுக்கு உகந்த இந்தத் தர்மத்தில் கீழ்க்கண்டவாறு நீங்களும் பங்குகொண்டு தாராளமாக உதவக் கேட்டுக் கொள்கிறோம்.

1. ஓர் உடலுக்கு ஸம்ஸ்காரச் செலுவு ரூ. 20 ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 350 ஏற்படுத்திக் கொடுத்து இதற்குக கிடைககும் வட்டித் தொகையைக் கொண்டு இது நடக்கும்படி செய்யலாம்.

2. ரூ. 101 கொடுத்து ஆயுள் அங்கத்தினராகலாம்.

3. பிரதி வருஷமும் ஒரு உடலுக்காகும் ஸம்ஸ்காரச் செலவு ரூ 20 கொடுத்து உதவியளிக்கலாம்.

5. பிரதி வருஷமும் உங்களால் முடிந்த அளவு ரூ. 1க்குக் குறையாமல் கொடுத்து உதவியளிக்கலாம்.

5. இதுவும் முடியாதவர்கள் பலரிடம் இந்தத் தர்மத்தைப் பிரசாரம் செய்து வாக் ஸகாயம் செய்யலாம்.

ஸகல க்ஷேமங்களையும் அளிக்கும் இவ்வுத்தமப் பணியில் பொது மககளும் தர்மஸ்தாபனங்களும் பங்குகொண்டு, தாராளமாகப் பொருளுதவி அளிக்க வேண்டுகிறோம்.

அநாதைகளுக்கு ஆதரவு அளியுங்கள். தர்மம் தலைகாக்கும்.

தொகை அனுப்ப வேண்டிய விலாசம்: காரியதரிசி, ஹிந்துமத ஜீவாத்ம கைங்கர்ய சங்கம், 14, காமாக்ஷி ஜோஸ்யர் தெரு, கும்பகோணம்.

---

ஓர் அறையில் அநேக ஆயிரம் ஆண்டுகளாக இருந்த இருட்டானது ஒரு தீபம் கொணரப்பட்டதும் உடனே அகன்று போகின்றது. அதுபோல அளவில்லாத பிறவிகள் தோறும் செய்த பாபத் தொகுதிகள் ஒருதரம் உண்டாகும் ஈசுவரனுடைய கருணை நோக்கினுலேயே மறைந்து போகின்றன.

— இராமகிருஷ்ணர்

4

# பிடி அரிசி அன்னதானம்

மதுரம்

"அற்ருர் அழி பசி தீர்த்தல்
அஃது ஒருவர்க்கு
பெற்ருன் பொருள் வைப்பு
வழி" என்று தமிழ் வேதமாகிய திருக்குறளில் திருவள்ளுவர் கூறியுள்ளார்.

வரியாரது துன்பம் மிகுந்த பசியைப் போக்குவதாகிய அறச்செயலானது பொருள் பெற்ற ஒருவனுக்கு அதைச் சேர்த்து வைக்கும் இடத்தைப்போன்றது, என்பது திருக்குறளின் கருத்தாகும்.

இதே கருத்துடன்தான் இன்று நயிலடைய்ய நடமாடும் தெய்வமாக விளங்கி வரும் காஞ்சி ஆசார்ய சுவாமிகள் 'பிடி அரிசி தானம்' என்ற எளிய திட்டத்தை நடத்துமபடியாகக் கூறியுள்ளார்கள். ஆரவைடு வேளையும பசியின்றி உலைவாக கூடிய வசதி படைத்த ஒவ்வொரு குடும்பத்தினரும் தினந்தோறும ஒரு கைப்பிடி அரிசியையும ஒரு பைசா நாணயத்தையும் ஒரு பானையில் போட்டு வைக்க வேண்டும்.

அப்படிச் சேர்ந்த அரிசியையும் பணத்தையும் அப்பேட்டையிலுள்ள ாவிலைச் சேர்நத அதிகாரிகளோ, அலலது ஒரு பொதுச் சங்கத்தினரோ வசூல் செய்ய வேண்டும். பிறகு அந்த அரிசியை வசூலான பணத்தைக் கொண்டு பக்குவஞ் செய்து பட்டைச் சாதமாக (பட்டைக்கு குறைந்தது 1 ஆழாக்கு அரிசிச் சாதம்)ஏழைகளுக்கு விற்க வேண்டும்.

இவ்வாறு செய்வதினுல் தானம் வாங்கும் ஏழைகளுக்கும் பிச்சை எடுக்கிருேம் என்கிற தாழ்வு மனபபானமை ஏற்படாது, வசது படைததவர்களுக்கும் கஷ்டமில லாத எளிய முறையில ஒரு தருமம செய்தோம என கிற மன நிறைவும் ஏறபடும். இவைதான பெரியவர்கள் கூறிய திட்டததின முக்கிய குறிக்கோளாகும்.

மேலே கூறியுளள திட்டத்தை சென்னையை அடுத்த ஆழ்வார் திரு நகரிலுள்ள ஸ்ரீ லெக்ஷ்மி பெண்கள் சங்கத்தைச் சேர்ந்த சகோதரிகள் மிகுந்த ஆர்வத்துடன் செய்து வருகிருர்கள்.

தற்போது அவர்கள் இத்திட்டத்தை 27 நாட்களுக்கு ஒரு முறை அதாவது காஞ்சிப் பெரியவர்கள் ஜன்ம நக்ஷத்திரமாகிய அனுஷத்தில் செய்வதாக நிச்சயம் செய்துள்ளார்கள். அதன்படி

கடந்த 16-6-73 அன்று வசூல் செய்யப்பட்ட 12 லிட்டர் அரிசியை பக்குவம் செய்து (மிளகு சீரகம், நெய் கலந்த பொங்கல்) பட்டை 10 பைசாவாக ஏழைகளுக்கு விற்பனை செய்தார்கள். பிறகு மறுபடியும் 11-7-73 அன்று 16 லிட்டர் அரிசி மேலே குறிப்பிட்ட முறையிலேயே பக்குவம் செய்யப்பட்டு விநியோகிக்கப்பட்டது. இந்த திட்டத்தின் மூலம் கிடைக்கும் வரவு மற்றும் செலவுகளுக்கு கணக்குகள் வைக்கப் பெற்றுள்ளது. இதன் மூலம் கிடைக்கும் அதிகப்படி பணத்தில் பக்குவம் செய்ய வேண்டிய பாத்திரங்கள் வாங்குவதாக உத்தேசித்துள்ளார்கள். வசதியும் வசூலும் அதிகரித்தால் இத்திட்டத்தை வாரம் ஒரு முறை என விஸ்தரிக்க எண்ணியுள்ளார்கள்.

தானத்தில் சிறந்தது அன்ன தானம் என்பதற்கு இணங்க, இத்திட்டம் மேலும் மேலும் நல்ல முறையில் நடைபெற பொதுமக்கள் ஆதரவும், சிந்தாமணி விநாயகர் அருளும் மேற்படி ஸ்ரீ லெக்ஷ்மி பெண்கள் சங்கத்தைச் சேர்ந்த சகோதரிகளுக்குக் கிடைக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர் வேத மார்க்கமாக ஆறு வகை உபாஸனைகளை ஏற்றுக்கொண்டதாகச் சங்கர விஜயங்கள் கூறுகின்றன. அவை—சைவம், வைஷ்ணவம், சாக்தம், ஸௌரம், காணபதம், கௌமாரம் என்பவையாகும்.

அவற்றில் காணபதம் அல்லது காணபத்யம் என்பது, 'கணபதி என்னும் விநாயகரே முதற் கடவுள், மற்ற எல்லாக் கடவுளுக்கும் அவரே முதல்வர், சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் இவற்றுக்குக் காரணமாக இருப்பவரும் அவரே' என்னும் கொள்கையைக் கடைப்பிடித்து வருகிறது. இந்த வகை உபாஸனை இன்றும் மகாராஷ்டிர தேசத்தில் காணப்பெறுகிறது. ஆனால் சாதாரணமாக விநாயகர் எல்லா விக்கினங்களையும் (இடையூறு) போக்குகிறவர் என்னும் வகையில் அவரைப் பூஜித்தபின்னரே எந்தச் சுப காரியங்களையும் நாம் நடத்தி வருகிறோம். வேதங்களிலும் உபநிடதங்களிலும் குறிப்பாகக் கணபதி உபாஸனையைப்பற்றி அதிகமாகக் கூறப்படவில்லை எனத் தெரிகிறது.

கணபதியைப் பற்றிய வரலாறுகள் விரிவாக ஸ்காந்தம் முதலான புராணங்களில் காணப்பெறுகின்றன. திருவாவடுதுறை ஆதீனத்தில் 1956-ஆம் ஆண்டில 'கணபதி' என்னும் சிறந்ததோர் ஆராய்ச்சி நூலை வெளியிட்டுள்ளார்கள். அந்த நூலில் 32 விநாயக மூர்த்தங்களின் லக்ஷணங்கள் வர்ணச்



# ஸ்ரீ ஷோடச விநாயகர் பிரதிஷ்டை

எஸ். சாம்பமூர்த்தி சாஸ்திரி

சித்திரங்களுடன் விளக்கப்பட்டுள்ளன. தஞ்சாவூர் அரண்மனை ஸரஸ்வதிமஹால் புத்தக சாலையில் பதினாறு விநாயக மூர்த்தங்களின் லக்ஷணங்கள் அடங்கிய நூல் உள்ளது.

கணேசர் பிறந்த வரலாறு புராணங்களில் பல வகைகளில் கூறப்பெற்றுள்ளது. கந்த புராணம் இந்த நிகழ்ச்சியை இவ்வாறு விவரிக்கிறது—பரமசிவனும் பரதேவதையும் ஒரு சமயம் உத்யோனவனத்துக்கு உலாவச் சென்ற பொழுது அங்குள்ள சித்திர மண்டபத்தில் பிரணவ உருவத்துடன் ஒரு சித்திரத்தைக் கண்டனர். பராசக்தியாகிய உமாதேவி அந்த உருவத்தை உற்று நோக்கியவுடன் அதில் ஓர் ஆண்யானையும் ஒரு பெண்யானையும்தோன்ற இவ்விரண்டு யானைகளின் சேர்க்கையால் அப்பொழுதே பிள்ளையார் ஓர் அழகிய உருவத்துடன் அவதரித்த அந்தப் பிள்ளையார் உடனடியாகச் சிவனையும் அம்பிகையையும் வணங்க, அவர்கள் அந்தக் குழந்தையைக் கைகளால் தூக்கித் தழுவி முத்தமிட்டுக் கொண்டனர். "எந்தக் காரியத்தைச் செய்ய முற்பட்டாலும் முதலில் மனிதர் உன்னை நினைந்து பூஜித்தாராகில் அவர்களின் காரியங்கள் கைகூடும்" என்று அருளி விநாயகரை ஆசீர்வதித்தனர்.

விபுத மகரிஷியும் மாகதை என்னும் கன்னியும் யானை உருவம் எடுத்ததனால் அவர்களுக்குக் கஜமுகாசுரன் என்னும் ஓர் அசுரன் பிறந்தான். அவன் தேவர்களை எல்லாம் வென்று அவர்களை இம்சித்து அவர்களைத் தன் எதிரில் நின்று தலையில் மூன்று குட்டுகள் போட்டுக்கொள்ள வேண்டுமென்று கட்டளையிட்டானாம். அவனது கொடுமை தாங்காத தேவர்கள் பரமசிவனை வேண்ட, பரமசிவனும் தம் குழந்தையாகிய விநாயகரை ஏவ விநாயகர் தம் ஆயுதங்கள் பலவற்றால் அவனைத் தாக்கியும் அவன் வீழாததைக் கண்டு, தம் தந்தங்கள் இரண்டில் ஒன்றை ஒடித்து அவன் மேல் ஏவ, அது அவனை இரண்டாகப் பிளந்துவிட்டுப்பின்னர் விநாகரையே வந்தடைந்துவிட்டது. பல உருவங்கள் எடுக்கவல்ல அந்தஅசுரன்பின்னர் மூஷிகம் என்னும் பெருச்சாளிஉருவத்துடன் விநாயகரைத் தாக்கினான். அவர் மூஷிகத்தை அடக்கி அதைத் தனது வாகனமாக வைத்துக்கொண்டார். தேவர்களும் துன்பம் நீங்கி, "அசுரன் முன் தலையில் குட்டிக் கொண்ட கரங்களால் இனி நாள்தோறும் தங்கள் முன் மும்முறை குட்டிக்கொள்கிறோம்" எனக் கூறி விநாயகரை வாழ்த்திவணங்கலாயினர். அன்று தேவர்கள் செய்ததையே நாம் இன்றும் வழக்கத்தில் வைத்துக் கொண்டிருக்கிறோம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக விநாயகர் உருவங்கள் மேல் நாடுகளிலும் கீழ் நாடுகளிலும் இருந்து வருவதை இன்றும் நாம் காண்கிறோம். பௌத்த சமயத்தவரும் விநாயகரை வணங்கி வந்துள்ளனர்.

விநாயகரின் பதினாறு மூர்த்தங்களையும் ஒரே விமானத்தில் அமைக்க வேண்டுமென்றும் அவ் விமானம் இதுவரை அமைக்கப்



பெறாத ஓர் அபூர்வ ஆலயமாக முழுவதும் கருங்கல்லால் அமையப் பெற வேண்டுமென்றும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளாகிய ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் திருவுள்ளம் கொண்டார்கள். அதை எவ்விதம் எங்கு அமைப்பது, யார் அமைப்பது என்னும் பிரச்னையை ஸ்ரீ ஸ்வாமிகளே தீர்மானித்தார்கள். 1962-ஆம் ஆண்டில் ராமநாதபுரம் ஜில்லா இளையாத்தகுடியில் நடைபெற்ற ஆகம-சில்ப மகாநாட்டிம் கலந்து கொண்ட நம் நாட்டுச் சிற்பிகளைக் கலந்து ஆலோசித்தார்கள். சுமார் பதினான்கு அடி உயரத்தில் ஒரே கறுப்புக் கல்லினால் விமானம் அமைவேண்டுமென்று கூறினார்கள். அவ்வளவு பெரிய அளவில் விமானத்தை ஒரே கல்லில் தயாரித்து, அதை ஸ்ரீஸ்வாமிகளின் விருப்பப்படி ராமேச்வரத்துக்கு அனுப்புவது கடினமாக இருக்குமாதலால் ஐந்து பாகங்களாகத் தயாரிப்பதாகச் சிற்பிகள் ஒப்புக்கொண்டார்கள் நல்ல கைதேர்ந்த சிற்பிகள் கூடி, ரதத்தின் உருவத்தில் எட்டுக் கோணங்களுடன் ஓர் விமானம் தயாரிப்பதென்றும், அந்த விமானத்தின் ஒவ்வொரு கோணத்திலும் இரண்டு விநாயகர் வீதம் பதினாறு மூர்த்தங்களையும் அமைப்பதென்றும் தீர்மானித்தார்கள். அதற்குத் தக்கவாறு படம் வரைந்து ஸ்ரீ ஸ்வாமிகளது அங்கீகாரத்தையும் அநுமதியையும் பெற்றனர். இந்த வேலையை ஆலயத் திருப்பணிகளில் நல்ல அநுபவம் வாய்ந்தவரும செட்டிநாட்டைச் சேர்ந்தவருமான கண்டனூர் திரு காளியப்ப ஆச்சாரி என்னும் ஸ்தபதியிடம் ஒப்புவித்தார்கள்.

விமான வேலை பூர்த்தியடைந்து இப்பொழுது ராமேச்



வரம் அக்னி தீர்த்தத்தின் கரையில் அமைந்துள்ள ஸ்ரீ ஆதிசங்கர விமான மண்டபத்துக்குப் பின்புறம் அதைப் பிரதிஷ்டை செய்

திருக்கிறார்கள். விமானத்தி லுள்ள விநாயக மூர்த்தங்களின் பெயர்கள் பின்வருமாறு:—



1. பால கணபதி, 2. தருண கணபதி, 3. பக்த கணபதி, 4. வீர கணபதி, 5. சக்தி கணபதி, 6. த்வஜ கணபதி, 7. பிங்கள கணபதி, 8. உச்சிஷ்ட கணபதி, 9. விக்நராஜ கணபதி, 10. க்ஷிப்ர கணபதி, 11. ஹேரம்ப கணபதி, 12. லக்ஷ்மீ கணபதி, 13. மஹா கணபதி, 14. புவனேச கணபதி, 15. ந்ருத்த கணபதி, 16. ஊர்த்வ கணபதி.

மேலே கண்ட பதினாறு விநாயக உருவங்களின் லக்ஷணங்களையும் விவரிக்கும் ச்லோகங்களும் அவற்றுக்குத் தமிழ் விளக்கமும் வெளியிடப்பட்டிருக்கின்றன விமானத்தில் விநாய புராணத்துக்குச் சம்பந்தப்பட்ட சனகர், முத்கலர் இவர்களது சிற்பங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன சோழ நாட்டுத் திருப்பணிகளில் பின்னர் எந்தச் சிற்பியும் செய்து முடிக்க முடியாதது எனப் பெருமையாகக் கூறப்படும் திருப்பணிகளில் தஞ்சைப் பெரிய கோவில் கோபுரம், ஆவுடையார் கோவில் ஆலயத்தின் கொடுங்கை, திருவீழிமிழலை ஆலயத்திலுள்ள பெரிய வௌவால் ஒட்டு மண்டபம், திருவலஞ்சுழி கற்பலகணி இவை குறிப்பிடப்பட்டுள்ளன.

இங்குக் கற்பலகணிகளின் அமைப்பையும் விநாயகர் விமானத்தின் ஏழு கோணங்களிலும் காட்டப்பட்டிருக்கிறது. இந்த விமானத்தின் நடுவில் ஒரு கர்ப்பக்ருஹம் அமைத்து, அதில் பழமையான விநாயகரையும் சமுத்திரத்தை நோக்கிக் கிழக்கு முகமாகப் பிரதிஷ்டை செய்திருக்கிறது.

ஸ்ரீ ஆசார்யர்களது ஆஜ்ஞைப்படி பக்தர்கள் பலர் இந்தத் திருப்பணிக்குத் தாராளமாகப் பொருளுதவி செய்துள்ளார்கள். நாட்டின் சிற்பக்கலைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குவதும், நவீன காலச் சிற்பிகளின் சாதனையைக் காட்டுவதுமான இந்த விமானம், கலைக்கும் வழிபாட்டுக்கும் ஓர் சிகரமாக விளங்கும் என்பதில் இந்துக்கள் யாவரும் பெருமை கொள்ள வேண்டும். இந்த விமானத்தை அமைத்து இதை ராமேச்வரத்துக்குக் கொண்டு சேர்க்கச் சுமார் ரூ. 40,000 வரை செலவழிந்திருக்கிறது.





# அப்பரும் இராமலிங்க அடிகளும்

தவத்திரு ஊரன் அடிகள்

இராமலிங்க அடிகள், சமய குரவர் நால்வரிடத்தும் பேரீடுபாடு கொண்டவர். நால்வரைப்பற்றி, ஆளுடைய பிள்ளையார் அருண் மாலை, ஆளுடைய அரசுகள் அருண் மாலை, ஆளுடைய நம்பிகள் அருண் மாலை, ஆளுடைய அடிகள் அருண் மாலை என நான்கு பாமாலைகளை அருளியிருக்கிறார். இந்நான்கும் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய நால்வர் நான்மணி மாலையை ஒக்கும்.

ஆளுடைய அரசுகள் அருண் மாலையில், 'உழவாரப்படை கைக் கொண்ட புண்ணியனே', 'ஆகம நெறியை வளர்க்க வந்த வள்ளலே', 'அப்பூதி அடிகட்கின்பம் தந்த பெருந்தகையே', 'சைவ அணியே' 'சைவக்கனியே' 'எங்கள் குல தெய்வமே' 'சைவக் கொழுந்தே' என்றெல்லாம் வள்ளற் பெருமான் அப்பர் பெருமானைப் போற்றுவர்.

திருப்புகலூர்த் திருத்தாண்டகத்தில் அப்பர் பெருமான் 'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்' என அருளுகிறார்.

'எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணினல்லால்
கண்ணிலேன் மற்றோர் களை கண் இல்லேன்
சழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல்
வைத்தாய் ஒக்க அடக்கும்போது துணரமாட்டேன்
புண்ணியா உன்னடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே.'
(6-99-1) 7215

இப்பாடலின் கருத்தையும், 'ஒண்ணுளே ஒன்பது வாசல்வைத்தாய்' என்னும் தொடரையும் எண்ணி உருகும் வள்ளற் பெருமான் 'ஒண்ணிலே ஒன்பது வாய்

வைத்தாய் என்ற உத்தமனே' எனப்போற்றி மகிழ்கின்றார்.

'கண்ணுளே விளங்குகின்ற
மணியே சைவக்
கனியேநா வாசேசெங் கரும்பே
வேதப்பண்ணுளேவிளைந்த அருட்
பயனே உண்மைப்
பதியோங்கு நிதியேநின்பாதம்
அன்றி விண்ணுளே அடைகின்ற
போகம் ஒன்றும் விரும்பேன் என்
றனையாள வேண்டுங் கண்டாய்.
ஒண்ணுளே ஒன்பதுவாய் வைத்
தாய் என்ற உத்தமனே சித்த
மகிழ்ந் துதவு வோனே'.

—திருவருட்பா, நான்காம் திரு
முறை —ஆளுடைய அரசுகள்
அருண்மாலை 5

ஒன்பது வாசலும் ஒக்க அடைக்கும் காலம் நமக்கொன்றுண்டு என்பதை நாம் கருதுவதில்லை. அப்பரும், வள்ளலாரும் அதனைக் கருதினர். இவ்விருவர்க்கும் ஒன்பது வாசலும் ஒக்க அடைத்ததில்லை ஒன்பது வாய்ப் பாண்டமாகிய உடம்பே ஒளியுடம்பாகப் பெற்று இறைவனோ டிரண்டறக் கலந்தனர்.

கல்லொடு கட்டிக் கடலிற் பாய்ச்சப்பெற்ற அப்பர் பெருமான் நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாடிக் கல்லே தெப்பமாக மிதக்கப்பெற்றுக் கரையேறினார்.

சமணர்கள் திருநாவுக்கரசரைக் கல்லில் கட்டி உவர் நீர்க் கடலில் வீழ்த்தினார்கள். நானும் கருங்கல்லிற் கட்டி கடலிடை வீழ்த்தப் பட்டு உழல்கின்றேன். என்னைக் கட்டியவர்கள் மாயையாகிய சமணர்கள். என்னைக்கட்டியது மனமாகிய கருங்கல்லில் என்னை வீழ்த்தியது பாவமாகிய கடலில். மாயைச் சமணரால் மனக் கருங்கல்லிற் கட்டப்பட்டுப் பாவக்கடலில் வீழ்த்தப்பட்டு உழல்கின்ற நானும் திருநாவுக்கரசரைப் போல் ஐந்தெழுத்தை ஓதுகின்றேன் என்னையும் கரையேற்று அரசே! என இறைவனை வேண்டுகின்றார்.

அப்பர் பெருமானின் அருள் வாக்குகளிலும், அவரது அருள் வாழ்க்கையில் நிகழ்ந்த அற்புதங்களிலும் வள்ளற்பெருமான் பெரிதும் ஈடுபட்டவர் என்பதனைத் திருவருட்பாவில் பலவிடங்களிற் காண்கிறோம்.

'என்கடன் பணிசெய்து கிடப்பதே' எனக்கிடந்தார் அப்பராகிய திருநாவுக்கரசர். 'தன்கடன் அடியேனையும் (அடியாரைத்) தாங்குதல்' என்று தாங்கினான் அப்பனாகிய இறைவன். இவ்வாறே வடலூர் மண்ணில் சங்கம் கண்டு' சாலை அமைத்து, சபை நிறுவிச் சன்மார்க்கம் வளர்த்துப் பணி செய்துகிடந்தார் வள்ளலார். தாங்கித் தானாக்கிக்கொண்டான் அருட்பெருஞ் சோதியாம் அப்பன்.

'நமனையஞ்சோம்' என்றார் அப்பர். நமனுக்கு இனி இங்கு வேலை

இல்லை என்றார் வள்ளலார். 'சென்று நாம் சிறு தெய்வம் சேர் வோமல்லோம்' என்றார் அப்பர். சிறு தெய்வ வழிபாட்டை ஒழித் தார் வள்ளலார்.

கொள்கையால், தொண்டினால் பெற்ற பேற்றால், இன்ன பல வகையால் அப்பரும் வள்ளலார் இராமலிங்க அடிகளும் ஒப்புடை யராவர்.

திருமணஞ்சேரியில் எழுந்தருளி யுள்ள அருள் வள்ளல் நாயகனை வாழ்த்தும் அப்பர் பெருமான் 'மணஞ்சேரியெம் வள்ளலார்கழல் வாழ்த்துகின்றார். நாமும் அம் மொழியே கொண்டு வடலூரெம் வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே' என வாழ்த்தி அப் பர் பெருமான் அடிமலர் பணிந்து அமைகின்றோம்.

அப்பர் பெருமான் அடிமலர்
போற்றி.

வள்ளலார் கழல் வாழ்த்தல்
வாழ்வாவதே.

# தீரா நோய் தீர்த்தருள வல்லான்



தவத்திரு சுந்தர சுவாமிகள்

உலகத்திற் பிறந்த உயிர்களுக்கு வருகின்ற தொல்லைகள் பல. அந்தத் தொல்லை விரைவில் மறைந்து விடுமானால் அதற்குத் 'துன்பம்' என்று பெயர். அது மறக்க முடியாமல் துன்புறுத்திக் கொண்டிருந்தால் அதற்குப் 'பிணி' என்று பெயர். மனத்திற்குத் தொல்லை தரும் துன்பங்களை, வேறு நல்ல எண்ணங்களை எண்ணுவதால் மாற்றிக்கொள்ள முடியும். ஆனால் உடலுக்கு வருகின்ற துன்பங்களை எண்ணத்தால் மாற்ற முடியாது. அது, உடலோடு பிணித்துக் கொண்டிருப்பதால் 'பிணி' என்று அதனைச் சொல்லுகிறோம். பிணித்தல்-கட்டுதல்.

உடலுக்கு வரும் பிணிகள் பல. உரிய நேரத்தில உணவு உண்ணா விட்டால் பசிப்பிணி வருகிறது. தட்ப, வெப்ப நிலை மாறுபட்டால் அதற்கு எற்ப உடற் பிணி வருகிறது. இவ்வாறு பல வகையாக வரும் நோய்களுக்கெல்லாம் தக்க மருந்துகள் கொடுதது நிவர்த்தி செய்ய வேண்டும். தகுதியில்லாத மருந்துகள் கொடுத்தால், நோய் தீராது. மிகையானாலும் ஆகலாம். உதாரணமாக பசிநோய் வந்தது என்றால், அதற்குரிய மருந்தாகிய உணவை உண்டால் பசிநோய் நீங்குகிறது. ஆனால் அவ்வுணவு, பொருத்தமற்றதாய், உடலுக்கு ஒவ்வாததாய் இருந்தால், பசிநோய் நீங்கி உடல் நோய் உண்டாகும். அதுபோல உடற் பிணிக்கும் அதற்குத் தருந்த மருந்தை நல்ல மருத்துவர்களிடம் பெற்று, உண்டு, நோய் நீக்கம் பெற

வேண்டும். நமது உடலுக்குச், 'சளி' உண்டாகித் தாகம் அதிகமானல், அதற்குரிய சாந்தி செய்ய வேண்டுமேயன்றித் தண்ணீர் குடித்தே தாகத்தை நீக்க முடியாது. இப்படி உடலுக்கு வரும் பல நோய்களையும் அவ்வவற்றிற்குரிய மருந்துகளாலேயே நீக்கம் பெற வேண்டும்.

நமது உடம்பை நல்ல முறையில் காப்பாற்றி வைத்துக் கொண்டிருப்பது 'உயிர்'. பிணி ஏதும் இன்றி, அழகாயும், இளமையாயும் உள்ள உடம்பு எனினும், உள்ளே இருக்கின்ற உயிர் பிரிந்து விடுமானல், இந்த உடம்புக்கு 'உடம்பு' என்ற பெயர்போய் வேறு பெயர் ஏற்பட்டுவிடும். பின்பு அதை ஒரு நாள்கூட வைத்திருக்க முடியாது. உடம்பை உடம்பாக வைத்திருப்பது உள்ளேஉள்ள 'உயிர்'. அத்தகைய உயர்வுள்ள உயிருக்கும ஒரு பிணி இருக்கிறது. அது 'தீராப்பிணி' 'பிறவி' என்னும் பிணி. உயிரானது மாறிப் 'புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப், பாம்பாகிக் கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்' வினைக்கு ஏற்பப் பல தேகங்களை எடுத்துக் கொண்டே இருக்கிறது. அது பிறவிப் பிணி. அப்பிணியை நீக்கும் நல்ல மருந்தினை, நமது முன்னோர்கள் கண்டு, அதனை உண்டு, அதன் பயனகப் பேரின்பப் பெரு வாழ்வைப் பெற்றுர்கள். அன்றியும், உலக பாசபந்தத்தில் அழுந்தும் நிலையைப் 'பித்தம்' என்பது ஆன்ருேர் கொள்கை. அதைத் தீர்ப்பது இறைவன் அருளே ஆகும். அது பற்றியே, 'பித்தம் தெளிய மருந்தொன்றிருக்குது பேரின்ப மன்றுள்ளே' என்ருர்கள். 'நல்ல மருந்திம் மருந்து-சுகம்-நல்கும் வைத்தியநாத மருந்து' என்று இறைவனைக் கூறுகின்ருர், இராமலிங்க அடிகளார். மேலும், உயிர்களை அநாதியாகப் பற்றியுள்ளது, ஆணவ மலம். இறைவன் அருளாலேயே அது நீங்கும், எல்லா நோயினும் கொடிய நோய் இது. 'தீராத பிணி' அறுமுகக் குருநாதன் தாள் நயந்தவர்க்கல்லது அப்பெரும் பிணி தீராது என்கிருர், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.

பிறவிப் பெருங்கடலாகிய தீராப் பிணியைத் தீர்க்கும் மருந்தாகிய உபதேச மந்திரத்தைத் தமக்கு அருளும்படி, 'அருணகிரிநாத சுவாமிகள்' முருகப் பெருமானை வேண்டுகிருர். 'தீராப் பிணி தீரச்-சீவாத்துமஞான-ஊராட்சியதான - ஓர்வாக்கருள் வாயே' என்பது பேரூர்த் திருப்புகழ். 'பிறவிப் பெரும் பிணிக்கோர் மருந்தேவருக' என்கிருர்; குமர குருபர சுவாமிகள். தீராத பெரும் நோய் ஆதலால் பிறவியைப் பிணி என்கிருர். தீர்க்கவல்ல மருந்தாக உள்ளான் இறைவன். 'விண்ணுக்கு ஒரு மருந்தை' என்பது 'திருவாசகம்'.

தீராப் பிணியாகிய பிறவிப் பிணிக்கு மருந்தாக உள்ள கட

வுள், விஷ்ணுக்கு ஒரு மருந்தாக இருந்தால் அந்த மருந்து, நமக்கு எப்படிப் பயன்படும் என்பதைக் 'திருநாவுக்கரசர் பெருமான்' விளக்குகின்றார்...'பிரிவிலா அடியார்க் கென்றும், வாராத செல்வம் வருவிப்பானை, மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித்-தீரா நோய் தீர்த்தருள வல்லான் தன்னை'...என்பது அவர் திருவாக்கு.

தன்னைப் பிரியாத அன்பர்களுக்கு இறைவன்-மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீரா நோய் தீர்த்தருளுகின்றான். ஒரு நோய் வந்தால அதை மணி, மந்திரம, ஔஷதம என்ற மூன்றால நீக்க வேண்டும். மணிமந்திரங்களால் நீங்கும் நோய்களும், மருந்து ஒன்றாலேயே நீங்கும் நோய்களும் உண்டு. பிறவியாகிய நோய, இந்த மூன்றாலும் நீங்க வேண்டும். இறைவன் இந்த மூன்றாகவும் இருந்து பிறவி நோயை நீக்குகின்றான். 'மணி' என்பது 'அக்கமணி'; 'மந்திரம்' அவனுடைய திருவைந்தெழுத்து: 'மருந்து என்பது 'திருவெண்ணீறு' ஆகிய இம்மூன்றாகவும் இறைவன் இருந்து தன்னை அடைந்த பிரிவிலா அடியார்களுக்கு அருளுகிறான். திருஞான சம்பந்தர் திருநெல்வேலித் தேவாரத்தில் சிவபெருமானை 'மருந்தவை' என்று கூறுகின்றார். வைணவர்களுக்கு-மணி 'துளசி மாலை' மந்திரம் 'அட்டாக்கரம்' மருந்து 'திருமண்' ஆகும்.

திருவெண்ணீறும் அக்கமணியும் அணிந்து ஊராட்சியதான உபதேசமந்திரப் பொருளாமேல நினைந்து வழிபாடு செய்யும் அடியார்கள் பிறவி நோய் தீரப் பெறுவர். இத்தகைய அடியார்களை, வணங்கினால், அவ்வணக்கம் இறைவனுக்கே போய்ச் சேரும். இவர்களுடைய நெஞ்சகத்தில இறைவனையும் காண முடியும். "எவரேனும் தாமாக விலாடத்திட்ட திருநீரும் சாதனமும் கண்டாலுள்கி..... ஈசன் திறமே பேணிக், கவராதே தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக காணலாமே" என்பது அப்பர் பெருமான் திருவாக்கு.

பிறவியாகிய பிணி நீங்க, அதற்குரிய மணி, மந்திர ஔடதமாமாகிய சாதனங்களை மேற்கொண்டும், சாதனங்களை மேற்கொண்ட பெரியோர்களை வாழ்த்தியும் வணங்கியும் தீராப்பிணியாகிய பிறவி நோய்க்கு முடிவு காண்போமாக.

# சரஸ்வதி சங்கம், புதுவயல்

ஸ்ரீ A. K. செட்டியார்

புதுவயல் சரஸ்வதி சங்கம் தோன்றி ஐம்பது ஆண்டுகள் ஆகின்றன என்பதை என்னால் சுலபமாக நம்பமுடியவில்லை.

பத்து அல்லது பதினொரு வயதுள்ள சுமார் ஐந்தாறு பள்ளிச் சிறுவர்கள் போதிய கல்வி அறிவோ அல்லது வசதியோ இல்லாமல், உற்சாகம் ஒன்றையே மூலதனமாகக் கொண்டு தொடங்கியது இச்சங்கம்.

அதிர்ஷ்ட வசமாக, சங்கம் தொடங்கிய சில ஆண்டுகளுக்குப் பின் கலவித் தொண்டிலும சங்கததினா ஆர்வம் காட்டி சரஸ்வதி வித்தியாசாலையைததொடங்கினர்.

இன்றையப் புது வயலின் முன்னேற்றத்திற்கு இவ்வித்தியாசாலை தான் ஆணிவேர் என்று கூறலாம்.

சங்கத்தினர் வித்தியாசாலையைத் தொடங்காமலிருந்திருந்தால் அச்சமயத்தில் தோன்றிய எண்ணற்ற சங்கங்களைப் போல இதுவும் மறைந்திருக்கும்.

இச்சங்கம தோன்றுவதற்கு முன் பத்தாண்டு காலந்தான் (19.2—1922) செட்டிமார் நாட்டின் மறுமலர்ச்சி காலம் என்று கூறலாம்.

1912ஆம்ஆண்டில் தேவகோட்டையில் ''வைசிய மித்திரன்' என்ற வாரப்பததிரிகையை ஸ்ரீ ST. ராமனுதன் செட்டியார் தொடங்கினுர்.

இரண்டாவது ஆறுமுகநாவலர் என்று புகழ்பெற்ற காரைக்குடி சொக்கலிங்க ஐயா அவர்கள் தமிழும் சித்தாந்தமும் பாடம் சொல்ல ஆரம்பித்தார்கள்.

திண்ணைப் பள்ளிக்கூடங்கள் கலாசாலைகளாக மாறின. ஒவ்வொரு கலாசாலையிலும் ஆங்கில ஆசிரியர் ஒருவர் இருந்தார். நாளடைவில் இக்கலாசாலைகள் நவீன உயர்நிலைப் பள்ளிகளாக மாறின.

பண்டிதமணி கதிரேசச் செட்டியார் போன்ற பெரும் புலவர்கள் தோன்றினுர்கள்.

மகாமகோபாத்யாய உ. வே. சாமிநாதையர், மறைமலையடி

கள், மோ. வே. கோவிந்தராஜய்யங்கார், திரு. வி. க. போன்ற பெரும் புலவர்கள் சொன்மாரி பொழிந்தனர்.

1913ஆம் ஆண்டில் தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகள் தொடங்கிய அறப்போருக்கு இந்தியாவில் நாடெங்கும் நிதி சேர்த்தனர். ஆத்தங்குடி சொக்கலிங்கம் புதூர் ஆகிய ஊர்களிலும் உள்ள நூற்றுக்கு மேற்பட்ட ஆச்சிமார்கள் உள்பட செட்டிமார் நாட்டில் பலரி நிதிக்கு உதவினர்.

கராச்சியில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் மகாநாட்டுக்கு, ராமனுதபுரம், திருச்சி, மதுரை, திருநெல்வேலி ஆகிய நான்கு ஜில்லாக்களுக்கும் ஸ்ரீ. மு. சித. பெத்தாச்சி செட்டியார் ஏகபிரதிநிதியாகச் சென்று வந்தார்.

தேசபக்தர் ஸ்ரீ சுப்பிரமணிய சிவம் காரைக்குடியில் சில காலம் தங்கியிருந்தார். கவியரசர் பாரதியார், வ. உ. சி. ராஜாஜி போன்ற தலைவர்கள் விஜயம் செய்தனர்.

செட்டியார்களின் வட்டித் தொழில் பர்மா, மலேயா சிலோன், இந்தோசீனு சுமத்திரா முதலிய நாடுகளில் செழிப்பாக வளர்ந்தது பர்மாவில் நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம் தோன்றியது.

தென் ஆப்பிரிக்காவில் நெட்டாலில் 1913 ஆம் ஆண்டில் (வ. உ. சி. இந்தியாவில் சிறையிலிருந்ததால்) அவர் குடும்பத்துக்கு நிதி சேர்த்தனுப்பினர். பலரும் ஒரு ஷில்லிங், இரண்டு ஷில்லிங் கொடுத்தனர். நாட்டுக்கோட்டை சுப்பிரமணி செட்டியார் கொடுத்தது பத்து ஷில்லிங்.

தொழில் துறையிலும் முன்னேற்றம் ஏற்பட்டது. செட்டியார்கள் பங்கு சேர்ந்து லிமிடெட் கம்பெனிகள் தொடங்கினர். பஞ்சாலைகளும் பஸ் போக்குவரத்துகளும், மின்சார நிலையங்களும் தோன்றின.

கோயில் திருப்பணிகளில் செட்டியார்கள் முழு மூச்சுடன் ஈடுபட்டனர்.

(ஸ்ரீ சரஸ்வதி சங்கம் பொன் விழா மலரிலிருந்து)



ஆசிரியரும் வெளியிடுபவரும் : T ராமனுதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-600087 அச்சிடுபவர்: தொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், தி. ந. டி, நகர், சென்னை 600035